*ஜநார்தநாசார்— ரஹஸ்யரத்னவளியில்*

"ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்......ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்ரவனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்"

என்கிற இந்த ஸ்ரீஸூக்தியும் சதுச்ச்லோகீபாஷ்யத்திலிருந்து காட்டியுள்ள நாலைந்து ஸூக்திகளும் நமக்கு உபாதேயமாக வழியேயில்லையே.

*ஜகன்னாதாசார்—*

"வேரிமாறாத பூமேலிருப்பாள்வினை தீர்க்குமே" "நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு "உன் திரு" "திருவுக்குந்திரு" "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு"

இத்யாதி ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரஸூக்திகள் திருக்கண் வளர்ந்துகொண்டே எழுதியவையாகத் தோன்றுகிறதேயொழிய வேறில்லை. இவற்றால் என்ன ஸாதிக்க விரும்புகிறாரென்பது தெரியவில்லையே.

*அம்மாளாசார்—* "அலமேஷா பரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோபயாத்" இத்யாதிகளை அடுக்கியிருப்பதும் ஸ்வப்நபாஷிதங்களென்றே தோன்றுகிறது.

*அப்பளாசார்—*

ஆளவந்தாரருளிய *நிஜகர்மாதி* பக்த்யந்த மித்யாதியான கீதார்த்த ஸங்க்ரஹச் லோகத்தின் பாஷ்யத்திலே ஸ்வாமி தேசிகன்.

"ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ அநுபபத்திதர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயத்வ புத்திரபி ஸ்யாத் இதி பாவஃ அந்தத: தைஸ்தை ராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ர உபாய:" என்றது நமக்கு நஞ்சல்ல.

பத்மநாபாசார்—ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில்

"*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதியோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் *வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்* என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஹைகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணை

*செய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம் போலே அண்ணுந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வ விஷய அப்ரதி ஹத கர்த்ருத்வ முடையவனேடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாய மாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று....*

*"என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளேயென் றும் "இசைவித் தென்னையுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே யென் றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனை அவன் செய்விக்கச் செய் கிற வ்யாஜமாத்ரத்தை அவனேடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏக சப்தத்துக்கு தாத்பர்யம்"*

இந்த ஸ்ரீஸூக்தியின் முன்னிலையில் நம்மவர்களின் ஸம்ரம்பங்கள் காசுக்கு முதவா தென்பதை உலகமுணர்ந்தேயுள்ளது.

*ஆசாரியர்—* போதும் போதும்; போய்வாருங்கள் ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி:

ஸ்ரீவைஷ்ணவதாஸன்.

